7

# லலிதா

## ஓர் இன்பக் கலப்பு

எளிய தமிழில் :

**ஸ்ரீ அருட்சக்தி நாகராஜன்**

ரிதம்பரா ஞான ஸபா

வெளியிடு :

**ஸ்ரீவித்யா குருமண்டல பரிஷத்**

உ

ஸ்ரீகுருப்யோ நம:

# லலிதா - ஓர் இன்ப கலப்பு

(லலிதா என்ற நாமாவின் பொருள்)

&

# மஹாவாக்யங்களின் விரிவுரை

கோடகநல்லூர் ஸ்ரீசுந்தர ஸ்வாமிகள்
எழுதிய ஸ்வானுபூதி ரஸாயனம் மற்றும் நிஜானந்தவிலாஸம்
என்ற நூல்களின் ஒரு பகுதியின் அலசல்.

எளிய தமிழில் - நூலாக்கம்:

ஸ்ரீவித்யோபாஸனச்ரேஷ்ட, ஞானசொற்கொண்டல்
**ஸ்ரீகாமேச்வரானந்தநாதர்**
(ஸ்ரீஅருட்சக்தி நாகராஜன்)
ரிதம்பரா ஞான ஸபா, புதுடில்லி

வெளியிட்டோர்:
**ஸ்ரீவித்யா குருமண்டல பரிஷத்**

மே 2009

First Edition: May - 2009
1000 copies

**Lalitha – Or Inba Kalappu (Tamil)**

Compiled in Simple Tamil
On the Basis of **SWANUBHUTHI RASAYANAM** and
**NIJAANANDAVILASAM** of **SRI SUNDARA SWAMIGAL**
By
**Sri Arutsakthi Nagarajan**
Founder/President
Ritanbhara Jnana Sabha
New Delhi
Mobile: 0-9990812178

Published by:
**Shrividya Gurumandala Parishad**

Printed by:
**Creative Enterprises**
64, Mettu Street, Vadapalani,
Chennai-600 026 (India)
Ph.: 044-24720326
Mobile : 9444005328
Email : entcreative@gmail.com

உ

# முன்னுரை

## ஸ்ரீகுருமண்டல பரிஷத்

மும்பையில் 2005-ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் **ஸ்ரீவித்யா மஹாயாக க்ரமம்** சுமார் பதினைந்து குருமண்டங்களைச் சேர்ந்த அறுபத்தி நான்கு உபாஸக தம்பதியினர்களால், ஒரு சேர நவாவரண பூஜை செய்த வேளையில் உதித்த ஓர் அமைப்பு நமது **ஸ்ரீவித்யா குருமண்டல பரிஷத்** என்பது. இதை அமைக்கும்போது இதுகாறும் பிரசுரமாகாத பழம் ஏட்டு சுவடிகளாயுள்ள நூல்களைப் பதிப்பித்து பிரசுரிக்கும் பணியும், மேலும் ஸ்ரீவித்யா தத்வங்களை விளக்கும் நூல்களை மறுபதிப்புசெய்து வெளியிடும் பணியும் முக்ய கொள்கைகளில் ஒன்றாக தீர்மானித்தோம். அதன்வழி கோடக நல்லூர் ஸ்ரீசுந்தரஸ்வாமிகளது நூல்களான ஸ்வானுபூதி ரஸாயனத்திலுள்ள ஒரு அத்யாயமான **லலிதானுபூதி ப்ரகரணமும்**, நிஜானந்த விலாஸம் என்ற நூலின் ஒரு அத்யாயமான **மஹா வாக்யார்த்த ப்ரகரணமும்** மிக தூய தமிழிலிருந்து புதுடில்லி ஸ்ரீஅருட்சக்தி நாகராஜன் அவர்களால் மீண்டும் இக்கால வழக்குத் தமிழில் மேலும் சில விளக்கங்களுடனும் **லலிதா ஓர் இன்ப கலப்பு** என்ற பெயரில் விரிவாக எழுதப்பெற்றுள்ளது. ஸ்ரீ ஸ்வாமிகளது நூல்களில் மிகவும் ஆழமான, உயரிய கருத்துக்களான ஸஹஜ பாவமும், ஜீவன்முக்தரின் நிலைகளும் விளக்கப் பெறுவதால், அவை **குஹாநந்த மண்டலி ஸ்ரீசிதானந்தநாதர்** போன்ற பெரியோர்களால் தங்கள் நூல்களில் மேற்கோள்களாக எடுத்தாளப்பட்டுள்ளன.

இம்முயற்சியில் நமது **ஸ்ரீவித்யா குருமண்டல பரிஷத்தும் ருதம்பரா ஞான ஸபாவும்** ஒருங்கிணைந்து ஸ்ரீவித்யைக்கு ஓர் சீரிய வழிகாட்டியான இந்நூலை வெளியிடுவதில் மிக்க மகிழ்ச்சி கொள்கிறோம்.

என்றும் தூய அன்புடன்,<br>
எல்லா ஸ்ரீகுருமண்டலங்களுக்கு<br>
வணக்கத்துடன் அவர்கள் ஆசி கோரிய,<br>
**ஸ்ரீவித்யா குருமண்டல பரிஷத்.**

# நூன் முகம்

## 1. லலிதா ஓர் இன்ப கலப்பு

**(ஸ்வானுபூதி ரஸாயனம்** என்ற நூலில் கண்ட **லலிதானுபூதி ப்ரகரணம்)**

**லலிதா** என்று கூறும்போதே நமக்கு நாவில் எத்தனை ருசியான ஒரு ஸுகானுபவம் ஏற்படுகிறது. அந்த ஸுகத்தை எத்தனை அழகாக **கோடகநல்லூர் ஸ்ரீசுந்தர ஸ்வாமிகள்** தனக்குள்ளேயே அனுபவித்து நமக்கு தமிழில் நூல் வடிவில் அருளி யிருக்கிறார்கள். இந்த **லலிதானுபூதி** என்பது - **ஸமாதியின்பம்.** இதனை வெளிப்பட நம்மால் சிந்திக்கவோ, வைகரீயாக வெளிப்பட சொல்லவோ முடியாது. ஆனால் மஹான்கள், ஸித்தர்கள் இந்த நிலையை தங்களுக்குளாக அனுபவித்திருக்கிறார்கள் என்பதுதான் ஸத்யம். அவர்கள் அதனை நாம் உணரும்வண்ணம் தங்கள் வழியில் சிலசமயம் வெளியிட்டுள்ளார்கள். உதாரணத்துக்கு கூறவேணுமானால் **ஸ்ரீரமண மஹரிஷி** ஸாதகர்கள் கேட்ட வினாக்களுக்கு விடையாக பலசமயம் ஸமாதியோகம் பற்றி கூறியுள்ளது நூல்கள் வாயிலாக நமக்குத் தெரியவருகிறது. இந்த **லலிதானுபூதி** பாகம் அவரது **ஸ்வானுபூதி ரஸாயனம்** என்றநூலின் ஒருபாகம் தான். அந்த நூல் பூராவும் சைவத்தை விளக்கவே எழுந்தது. இந்த நூலை பலஆண்டுகளாக பலமுறை படித்து படித்து பார்த்து வந்தேன். அதே சமயம் ஸ்ரீலலிதா ஸஹஸ்ர நாமங்களில் இறுதி நாமாவான **ஸ்ரீலலிதாம்பிகா** என்றதின் அர்த்தத்தையும் த்யானித்தபோது இவரின் விளக்கமே அதன் தத்வ ரீதியான பொருளாக அமைந்திருப்பதை தன் அனுபவத்தில் உணர்ந்தவுடன் அருளின் கருணை புலப்பட்டது. அதே சமயம் ஸ்ரீலலிதையின் த்யானச்லோகமும், ஸ்ரீலலிதா ஸஹ்ஸ்ர நாமத்தில் உள்ள சில நாமங்களின் பொருளை தத்வமாக சிந்தித்த போதும் இங்கு அழகாக பொருந்துவதை அறியலாம். அதனை சிந்தித்தபின் அந்தவழியில் இதன் பொருளைப் பொருத்திக்கண்டு மகிழ்ந்தவாறு இங்கு விளக்கியிருக்கிறேன். இது இந்த நூலில் சற்று பழமையான தமிழ்ச் சொற்களில் அமைந்திருந்ததினால் அதற்கு நம்மால் முடிந்தவரை எளிமையான தமிழில் எழுதிப்பார்க்கலாமே என்றபோது இது இவ்வாறு அமைந்தது. ஸ்ரீஸ்வாமிகளின் வார்த்தைகளின் ஊடே அதன் தொடர்பை விளக்குவதற்காக Brackets ல் தொடர்புரைகள் கொடுத்துள்ளேன். அது வாசகர்களுக்கு சற்று துணை செய்யுமென நம்புகிறேன். மற்றும் காஞ்சி

ஸ்ரீமஹாபெரியவர்களின் சில ஒத்த கருத்துக்கள் இதில் பிற்சேர்க்கையாக உள்ளன.

## 2. மஹாவாக்யங்களின் விரிவுரை

(நிஜானந்தவிலாஸம் என்ற நூலில் கண்ட **மஹாவாக்யார்த்த ப்ரகரணம்**)

**மஹாவாக்யங்கள்** என்பது வேதங்களின் ஸாரமாக உள்ளவை என்பது பெரும்பாலானவர்களுக்குத் தெரிந்ததே! இது ஆசாபாசங்களை விட்டு துறவு நிலை மேற்கொள்பவருக்கு அவரின் குருநாதரால் அருளப்படுபவை என்பர் பெரியோர். ஆனால் ஒரு ஸ்ரீவித்யா உபாஸகருக்கு அவர் மஹாஷோடசீவித்யை தீக்ஷை கிடைக்கும் காலத்தில் அவரின் குருநாதரால் ஸ்ரீவித்யா மஹா குருபாதுகா மந்த்ரத்தில் சேர்த்து அருளப்படுபவை என்று உபாஸக உலகம் அறியும். ஆனால் இந்த மஹாவாக்யங்களின் பொருள் உபநிஷதங்களிலும் பல நூல்களிலும் ஆங்காங்கே பரவியுள்ளன. இங்கே **ஸ்ரீஸுந்தர ஸ்வாமிகள்** தனது **நிஜானந்த விலாஸம்** என்ற நூலில் இதற்கென்றே **மஹாவாக்யார்த்த ப்ரகரணம்** என்ற தலைப்பில் விரிவான விவரணம் கொடுக்கிறார். அதனை படித்த காலத்தில் நமது உபாஸனைக்கு அது மிகவும் உபகாரமாக இருக்கக்கூடும் என்ற நினைவில் அதையும் லகு தமிழில் முடிந்த வரையில் எழுதப்பட்டுள்ளது. இருந்தபோதிலும் பெரும்பாலான இடங்களில் மாற்று வார்த்தைகள் புலப்படாததால் பதங்கள் அப்படியேதான் எடுத்தாளப்பட்டுள்ளன.

எனவே இந்த **லலிதா ஓர் இன்ப கலப்பு** மற்றும் **மஹாவாக்யங்களின் விரிவுரை** என்ற இரண்டு தொகுப்புக்களையும் அன்பர்கள் படித்து, பொருளைப் பொருத்திக்கண்டு ஆனந்திக்க இதனை நமது **ஸ்ரீவித்யா குருமண்டல பரிஷத்** நூல் வடிவில் அச்சிட்டு அனைவருக்கும் வழங்குகிறார்கள். இதனை அச்சிட்டு வெளியிட **ஸ்ரீவித்யா குருமண்டல பரிஷத்** அனுமதியளித்து ஒரு முன்னுரையும் அளித்து கௌரவித்துள்ளார்கள். இத்தகைய பெருமுயற்சியில் **ருதம்பரா ஞானஸபாவை** ஆட்படுத்திய **ஸ்ரீவித்யா குருமண்டல பரிஷத்துக்கும்** ஸ்ரீஸத்குரு மண்டலிகளுக்கும் என்றென்றும் நாம் நன்றிக்கடன் பட்டவர்களாவோம்.

01-01-2009 உங்கள் சொந்த ஆத்மன்,
புதுடில்லி, அருட்சக்தி நாகராஜன்.

# ஸ்ரீ ஸௌந்தர ஸ்வாமிகள் பற்றிய சிறு குறிப்பு

1831ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 3ஆம் நாள் (1007 கொல்லம் ஆண்டு, கர வருடம் கார்த்திகை 20ஆம் தேதி சனிக்கிழமை) அனுஷ நக்ஷத்ரத்தில் ரிஷப லக்னத்தில் அமாவாசை நாளில் கங்கைகொண்டானில் உள்ள ஸ்ரீவத்ஸ கோத்ரத்தில் ஸ்ரீ யக்ஞேசுவர சாஸ்திரிகளுக்கும் ஸ்ரீமதி காமாக்ஷி அம்மைக்கும் சுந்தரம் மகனாக அவதரித்தார்.

## குருபரம்பரை

அப்பைய தீக்ஷிதர்

நீலகண்ட தீக்ஷிதர்

அனந்த நாராயண சாஸ்த்ரிகள்

யக்ஞேசுவர பட்டர்

யக்ஞஹம்ஸர்

ராமசுப்ரமண்ய புண்டரீகர்

சிவசுப்ரமண்யர்

ராமசந்த்ர சாஸ்த்ரிகள்

விஸ்வேசுவரர்

சுந்தரயதீந்த்ரர்

1878 ஆம் ஆண்டு (கொல்லம் 1054 ஐப்பசி மாதம் 6ஆம் நாள் திங்கட்கிழமை - க்ருஷ்ணபக்ஷதசமியில்) அரிமளித்தில் தனது அன்பர்களிடம் தனக்களிக்க பெற்ற பாண லிங்கத்தை வழிபட கூறிய இஞ்ஞான ஸித்தர் ஸமாதியிலமர்ந்தார்.

உ

# லலிதா ஓர் இன்ப கலப்பு
## (லலிதானுபூதி ப்ரகரணம்)

**(ப்ரம்மத்தை த்யானம் செய்வது என்பது ஒரு கடினமான செயல். ஆனாலும் அந்த ப்ரம்மம் என்று சொல்லக்கூடிய ஆத்மாவை அதாவது நிர்குண-ப்ரஹ்ம பரிபூரணத்தை இவர் த்யானம் செய்யச்சொல்லுகிறார். ஸமாதியை நன்றாக விளக்கு கிறார். ஸாதகன் ஸமாதிநிலையில் வெகுநேரம் இருக்கிறான். பின் வெளிமுகமாக நினைவை திருப்பும் சமயம் படிப்படியாக அமையும் ஒரு சிந்தனையை விளக்குகிறார்.)**

பரிபூரணத்தை த்யானம் செய்துகொண்டே அது எங்கும் வ்யாபித்திருப்பதாக அறிவுக்கண்ணால் நிதானிக்க வேண்டும். வ்யாபித்து பார்த்து அனுபவிக்க வேண்டும். அதன் பிறகு அந்த அறிவான பார்வையை முன் த்யானிக்கின்ற பூரணத்திற்கும் **பூரணமான ஞானம்** என்று அறிந்து அந்த அறிவுமாத்திரமாய் நிற்க வேண்டும். அப்படி பார்த்த பார்வையும் நீங்கி விடும். அப்படி அந்த பார்வை நீங்கின இடம்தான் **நிர்குணப்ரம்மம்.**

**(இந்த அனுபவம் ஏற்பட்டதற்கு பின் வெளிமுகமாக நினைவு ஏற்படுமானால் அந்நிலையை இனி விளக்கமாக விவரிக்கிறார்.)**

இது ஒரு **அனுபூதி**. இதிலிருந்து ஞாபகம் உண்டானால் என்ன நடக்கும் ? ஒரு எண்ணமுமே இல்லாத நிர்க்குண ஞான வடிவ ப்ரம்மம் மாத்திரமாய் இருந்தோம் என்றும். பூரணத்திற்கும் பூரணமான பார்வையாய் இருந்தோம் என்றும்- அனுபவம் வருகிறது. அதனை பூரண சைதன்ய சாக்ஷியாய்ப் பார்த்ததால் நாம் பார்த்தவன் என்று எண்ணலாம். அப்படி பார்வை இல்லாத இடத்தில் நாம் இருந்தோமா என்றால் அதனை ஞானமில்லாமல் அறியக்கூடாதது. எண்ணமில்லாத இடத்தை தாமே அனுபவித்து சொல்வது, பாதிக்க ப்படாத அனுபவமான- **நான்** என்கிற அஹங்கார வ்ருத்தியும் இல்லாதது. நான் என்ற அஹங்கார வ்ருத்தியின் உண்மையாய் உள்ள **நிர்குண ஞானப்ரஹ்ம** ஸ்வபாவமான நான் மாத்திரமாய் இருந்தோம் என்று அறிவது - இப்படி ஒரு அறிவு ஏற்படுகிறது. அதன் பின்புதான் ஜாக்ரத், ஸ்வப்ன, சுஷுப்தி என்கிற மூன்றையும்

அறிந்துள்ள தன்னை நிதானிக்க வேண்டும்.
**(இப்போது ஜாக்ரத் ,ஸ்வப்ன, சுஷுப்தி மூன்றையும் அறியும் விதத்தை கூறுகிறார்.)**

**ஜாக்ரத்** :- ப்ருத்வி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம். இதனுடைய குணங்கள் சப்த, ஸ்பர்ச, ரூப, ரஸ, கந்தமான இந்த ஜகத். இந்த ஜகத் குணங்களின் விகாரம் ஆனபடியினால் இவற்றை க்ரஹிக்கும் ஸாதனங்கள் ஞானேந்த்ரியங்கள். (ச்ரோத்ரம், த்வக், நயனம், ரஸனை, க்ராணம்). இந்த ஸாதனங்களை க்ரஹிக்கும் ஸாதனம்தான் அந்தக்கரண வ்ருத்திகள். அதாவது **மனம், புத்தி, சித்தம், அஹங்காரம்.**
**(இவற்றினுடைய நிருபணத்தை தொடர்ந்து சொல்லுகிறார்.)**

ச்ரோத்ரமானது மனசோடு கூட சப்தத்தையும்,
த்வக்கானது மனசோடு கூட ஸ்பர்சத்தையும்,
நயனம் மனசோடு கூட ரூபத்தையும்,
ரஸனை மனசோடு கூட ரஸத்தையும்,
க்ராணம் மனசோடு கூட கந்தத்தையும் க்ரஹிக்கின்றது.

**(மனம் புத்தி சித்தம் அஹங்காரம் என்ற நான்கிற்கும் இந்த பார்வை பொருந்தும். இந்த நான்கையும் நான்கு கைகளாக உருவகப்படுத்திக்கொள்வோம். இந்த நான்குமே ஸ்ரீலலிதையின் மேல் இடதுகையில் கரும்பு வில்லாக அமைந்திருக்கிறது- மனோரூபேக்ஷுகோதண்டா- ஸ்ரீலலிதா ஸஹஸ்ரநாமம் -10, மன: இக்ஷுதனு: - ஸ்ரீபாவனோபநிஷதம்-23.
இனி சற்று அருட்சக்தி விளக்கம் காணுவோம்.**

**லலிதையின் கையில் பாசம் எது ?**

**கனியைப்பார்த்தபோது அது இனிப்பானது, அதை சுவைக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்படுகிறது. அதை எடுத்து சுவை க்கிறோம். இப்போது ராகம் என்ற ஆசை பூரணத்துவம் பெறுகிறது. இதையே பூரணத்திற்கும் பூரணமாக பார்க்கும்போது கனி, இனிப்பு, சுவைத்தல் மூன்றும் ஒன்றாகி மனதில் ராகம் என்ற ஒரு உணர்ச்சி மறைந்துவிடுகிறது. அதாவது ராகத்தை வெல்லுதல் என்ற**

நிலை ஏற்படுகிறது. இதை பாசம் என்று உருவகப்படுத்திக் கொள்வோம்.

லலிதையின் கையில் அங்குசம் எது ?

அந்த கனியில் ஒரு பூச்சி இருப்பதாக வைத்துக் கொள்வோம். அப்போது அதை சுவைக்க வேண்டும் என்ற எண்ணத்திற்குபதில் அது தீங்கு செய்யும் என்ற நிலையில் அதில் துவேஷம் ஏற்படுகிறது. அதை நிதானிக்கும்போது மனதில் எந்த ஒரு எண்ணமும் எழாமல், தான் பரம்பொருளே! எதிரே இருப்பதும் பரம்பொருளே! என்ற நிலையில் பூரணத் திற்கும் பூரணமான நிலை எழ வேண்டும். இங்கு இந்த த்வேஷத்தை அங்குசமாக நினைப்போம்.

லலிதையின் கையில் புஷ்பபாணங்கள் எது?

கனியின் முழு உருவமும் கண்ணிற்கு தெரிந்தாலும் அதன் மறு பக்கத்தில் கண்ணில்படாத ஒருபாகம் இருக்கிறது அல்லவா? இருந்தாலும்கூட அந்த கனியின் பூரணத்தன்மை உணரப்படுகிறது. இதனால் நமது பஞ்சேந்த்ரியங்களும் பூரணத்தன்மை உடையதே! இதை பஞ்சபுஷ்ப பாணங்களாக உருவகப்படுத்திக்கொள்வோம்.

(சதுர்புஜே சந்த்ரகலாவதம்ஸே குசோன்னதே குங்கும ராகசோணே, புண்ட்ரேக்ஷு பாசாங்குச புஷ்பபாண ஹஸ்தே நமஸ்தே ஜகதேகமாத:)

இந்த லலிதாவின் த்யான ஸ்லோகத்தின் பாவனை:

சதுர்புஜங்களான அந்தக்கரணங்கள், சந்த்ர கலை என்ற மனதின் நிலைப்பாடு, ஞானாம்ருதப் பெருக்கான குசங்கள், வித்யாமய பாவனையென்னும் குங்குமப்பெருக்கு, மனதின் பூரணத்வமான கரும்புவில், ராகத்வேஷங்ளை ஆளும் பாசஅங்குசங்கள், ஐம்புலன்களின் அசைவான புஷ்பபாணம் இவைகளுடன் கூடிய லலிதையின் லாலனத்தை வணங்குகி றேன்.

**இனி ஸ்ரீஸுந்தரஸ்வாமிகளைத் தொடர்வோம்.)**

**மனஸ்** என்பது காரணம் இல்லாமல் ஸந்தேஹத் தன்மையுடன் கூடிய ஸங்கல்ப முடைய அறிவு.

**புத்தி** என்பது உறுதித்தன்மையுடன் நிச்சய வடிவ ஸங்கல்பமுடைய ஞானம்.

**சித்தம்** என்பது முன்னால் நடந்ததையும் பின்னால் நடக்க வேண்டியதையும், இப்போது நடப்பதையும் பற்றி பரியாலோசனை செய்கிற ஸங்கல்ப ஞானம்.

**அஹங்காரம்** என்பது ஸகல வ்யாபாரங்களையும் ஒட்டி நிதானிக்க வல்லவன் நான் என்கிற ஸங்கல்ப ஞானம்.

**(இதன் விளக்கத்திற்காக ஸ்ரீநாகசுந்தரம் எழுதிய ஒரு கவிதை இங்கு இணைக்கப்படுகிறது-**

**ஐந்தான பூ அம்பே ஐம்புலக்காட்சி !**
**அறிவான அகக்கரணம் அதற்கு அன்னை சாக்ஷி !**
**நினைவு, கனவு, ஆழ்தூக்கம்**
**மூன்றான நிலையினிலும் ஒன்றாய் நிற்கும்**
**முதலான அறிவேதான் முப்புரமாக்ஷி !**
**நினைவில்லை கனவிலே !**
**கனவில்லை உறங்கையிலே !**
**அழகான சாக்ஷியொன்று**
**அனைத்திலும் நிற்கும் ! அதுவேதான்**
**அன்னையெனும் மாதா லலிதை !**

**இனி ஸ்ரீஸுந்தரஸ்வாமிகளைத் தொடர்வோம்.)**

இத்தனையும் பேதமில்லாமல் தன்னை உள்ளபடி அறியாமல் நான், எனது என்ற அபிமானத்துடன் விளங்கிய அறிவு **ஜீவன்.**

இவ்வளவும் விகல்பமான எண்ணமில்லாத காலத்தில் கூட அறியும் தன்மை உடைய ஞானம் **கூடஸ்தன்** எனப்படுகிறான்.

இவர்களை ஜாக்ரத்தில் யுக்தியாய் அனுபவத்துடன் அறிய எல்லா பதார்த்தங்களிலும் இருக்கின்றது. அந்த தர்மத்தை அறிய விவரம்.

ஜாக்ரத்தில் கண்ட ஜகத்தானது பஞ்சபூத ரூபமானதால் பஞ்ச பூதங்களிலும் உள்ளடங்கிய பஞ்ச விஷயங்களும்.

அவைகளை தவிர வேறெதுவும் இல்லாதனால் அந்த விஷயங்களோடு கூடின பஞ்ச பூதங்களும் பஞ்சேந்த்ரியங்களால் க்ரஹிக்கப்படுவதால் இந்த பஞ்சசேந்த்ரியங்களைத் தவிர ஜாக்ரத்தில் கண்ட ஜகத் வேறில்லை.

**(இதை எப்படி என்று கூறுகிறார்).**

உலகத்தில் பஞ்சேந்த்ரிய வ்யாபாரம் இருந்தால் ஜகத் என்பது உண்டு. பஞ்சேந்த்ரிய வ்யாபாரம் இல்லாவிடில் அது அறியப்படாததால் ஜகத் இல்லை. இந்த பஞ்சேந்த்ரியங்களும் அந்தக்கரண வ்யாபாரம் இல்லாவிட்டால் பொய்யாகி விடும். இந்த அந்தக்கரண வ்யாபாரங்கள் ஜடங்கள். ஆனதால் தாங்கள் இருக்கும் காலத்திலும் இல்லாத காலத்திலும் வேறுபட இருந்து அறிய ஒரு அறிவு அவச்யம் இருந்து அனுபவிக்கப்படுகிறது. ஆதலால் தாங்கள் இல்லாத இடத்தில் அவை அனுபவத்திற்கு வருகிறது. அப்படி அதை அறிந்த அறிவை இல்லை என்று ஒருவராலும் மறுத்து கூற முடியாததனால் அந்த விதமான அறிவை **சாக்ஷி** என்று கூறலாம்.

அந்த அறிவின் நிழல் வடிவமான அறிவுபோல் உள்ள அறிவு அந்தக்கரண வ்ருத்திகள் என்று கூறுகிற கண்ணாடியில் ப்ரதி பிம்பிக்கிறது. அதனால் அந்த அந்தகரண வ்யாபாரங்களும் அறிவு போல் விளங்குகின்றன. அவற்றில ப்ரதிபிம்பித்த அறிவை கண்ணாடியில் ப்ரதிபிம்பித்த தன் முகத்தை முகம் என்று சொல்லக்கூடாதது போல அறிவு என சொல்ல முடியாது.

அப்படியானால் ப்ரதிபிம்ப முகம் தன் முகமின்றி விளங்காது. அதுபோல இந்த ப்ரதிபிம்பமான அறிவும் தனது பிம்பமான சாக்ஷி இல்லாமல் விளங்காது. இவ்வித ப்ரதிபிம்பமான அறிவே நான் என்ற ஞானம் - ஜீவ ஞானமாம். இந்த ஞானத்தால் தோன்றுகின்ற தேஹம் முதலான எல்லாவற்றையும் நான் என்றும் எனது என்றும் அபிமானிக்கிற ஞானம்தான் **ஸம்ஸாரம்.**

இந்த அந்தகரணவிருத்திகளை ப்ரதிபிம்பித்த ஞானமே அந்தகரணங்களுக்கு அறியும் வல்லமையாய் இருக்கிறது. ஆதலால் அந்த அந்தக்கரணங்களால் விளங்குகின்ற இந்திரிய வ்யாபாரங்கள் அந்தக்கரண வ்யாபாரங்களின் அறியும் வல்லமையான ப்ரதிபிம்ப

ஞானம் இல்லாமல் விளங்கமாட்டாது. அந்த அந்தக்கரண வ்யாபார ங்களின் அறியும் வல்லமையான ப்ரதிபிம்ப ஞானமே இந்த்ரியவ்யா பாரங்களுக்கும் அறியும் வல்லமை என சொல்லப்படும்.

இந்த்ரிய வ்யாபாரங்களில் தங்கிய அறிவும் வல்லமையான ப்ரதிபிம்ப ஞானமே - இந்த்ரிய வ்யாபாரங்களால் விளங்கிய ஸகல உலகங்களிலேயும் இந்த்ரியங்கள் வ்யாபித்ததுபோல் உள்ளும் வெளியும் வ்யாபித்து ஸகல உலகங்களையும் வெவ்வேறாய் தோற்றுவிக்கிறது.

**(இது எப்படி என்று கூறுகிறார்)**

உலகத்தில் எவ்வளவு சப்தம் உண்டோ அவ்வளவையும் வெகு தூரத்தில் இருந்தும் சமீபத்திலிருந்தும் காதே க்ரஹிக்கிறது. சப்தங்களால் தோன்றின தூரமும், சமீபமும் அந்த சப்தங்களின் பொருளால் தோன்றின பதார்த்தங்களும் காதினால் அறியப்படுகிறது. இதனால் அறியும் தன்மை ஞானமானதால் கேட்கிறோம் என்கிற வ்ருத்தியே அவ்வறிவுக்கு உபாதி ஆகிறது. அப்படி கேட்கிறது என்கிற வ்ருத்தி யுடைய அந்த ஞானம் அவ்வளவு தூர சமீபங்களையும், அந்த சப்தங் களின் பொருளால் விளங்கின பதார்த்தங்களையும் வ்யாபித்து அறியாமல் நிற்கின்ற அறிவாய் நிற்கிறது.

**(ஆனால் அவ்வளவு தூர- சமீபங்கள் அடங்கிய வஸ்துக்களை ச்ரவண உபாதியை உடைய வ்ருத்தி ஞானம் எப்படி நிறைந்து வ்யாபித்தது என்கிற அனுபூதியின் விவரத்தை இனி கூறுகிறார்.)**

**ச்ரவண உபாதி (கேள்வியின் பூரணம்)**

ஒருவன் வெகு தூரத்தில் இருந்து சில விஷயங்களாக உள்ள சுக துக்கமுடைய வசனங்களை கர்ஜிக்கிறான். அதை கேட்டு அறிகின்ற ச்ரவண உபாதியை உடைய வ்ருத்தி ஞானத்தால் அந்த சப்தங்களோடு கூட எவ்வளவு தூரத்திலிருந்து கர்ஜிக்கப்பட்டதோ அவ்வளவு தூரம் வரை சூக்ஷ்மமாய் நிதானத்துடன் வ்யாபித்து அவ்வளவு தூரத்தையும் அந்த சப்தங்களில் உள்ளடங்கிய அர்த்த ரூபமான வஸ்துக்களையும் அறிந்ததால், அவ்வளவு விஸ்தாரமுடைய அறியும் வல்லமை ச்ரவண உபாதியை உடைய ஞானத்திற்கு இத்தனை பூரணத்துவம் இருக்கிறது என்று அனுபவத்துக்கு வரும்.

(இதன் விளக்கத்திற்காக ஸ்ரீநாகசுந்தரம் எழுதிய ஒரு கவிதை இங்கு இணைக்கப்படுகிறது-

ராமனுக்கு தந்தையான தயரதன் !
காட்டிலே குரல்கேட்டு விடுப்பான் அம்பை !
யானையின் குரலென விடுத்த அம்பு,
சிரவணன் என்ற சிறுவனின் சரீரம் பட்டு
விலங்கில்லை, மனிதன் என்றறிந்த மன்னன்
கலங்கியே தன் மனதால் நொந்தான் !
காதிலே கேட்ட சப்தம் தொலைவிலே நின்றபோது
கருத்தாலே அறிவதுதான் பூரணத்தன்மை !
தூரத்தை வ்யாபித்து நிற்கும் சப்தம் !
தீவ்ரமாய் அறிகையிலே தத்துவ லலிதை !
தேசகால தன்மையெல்லாம் திருவாம் லலிதை !
பிம்பமாய் தெரிகிற முகத்தைப் போல
ப்ரபஞ்சமே பரமதன் பிம்பமாகும் !
இனி சற்று அருட்சக்தி விளக்கம் காணுவோம்.

பார்வையின் பூரணம்

எதிரே ஒரு கனி இருக்கிறது. அதை கண்ணால் பார்க்கிறோம். கண் என்ற இந்த்ரியம் பார்க்கிறதே தவிர மனம் இல்லாமல் அதை காண இயலாது. எனவே மனம் என்ற அந்தக்கரணம் கண் என்ற புறப் புலனால் அந்த கனியைக் காண்கிறது. புத்தி என்ற மனதின் இன்னொரு பாகம் அதை மாங்கனி என்று ஆராய்ந்து கூறுகிறது. இந்த சாதாரண பார்வை இப்போது பூரணம் பெற்றுவிட்டது. மனம் எண்ண, கண் பார்க்க, புத்தி ஆராய எதிரே ஒரு மாங்கனி இருக்கிறது என்ற ஒரு பார்வை பூரணம் பெற்றுவிடுகிறது.

இப்போது இந்த பூரணத்திற்கும் பூரணமான ஒரு பார்வை இருக்கிறது. அது என்னவென்றால் கண்ணிற்கும் அந்த கனிக்கும் இடையே ஒரு தொடர்பு ஏற்பட்டு அது விரவி நிற்கிறது. மனமானது கண்ணுக்கும் அந்த கனிக்கும் இடையே ஊடுருவி அந்த இடை ப்பட்ட தூரம் முழுவதும் பரவி பூரணத்துவம் பெறுகிறது. ஒரு பொருளைப்பார்க்கும் போது பூரணமான நிலையில் அகண்டாகார வ்ருத்தி என்ற

**நிலையில் கனிக்கும் கண்ணுக்கும் இடையில் உள்ள தூரத்தை பூரணத்வம் பெற வைக்கிறது. எங்கோ உள்ள ஒரு பொருளை மனதினால் எண்ணும்போது அந்த இடைப்பட்ட தூரம் முழுதும் மனமானது பரவி நிற்கிறது. அதை நிதானிக்கும்போது மனதின் பூரணத்தன்மை அனுபவத்துக்கு வருகிறது. இதுவே பூரணத்திற்கும் பூரணமான பார்வை.**
**இனி ஸ்ரீஸுந்தரஸ்வாமிகளைத் தொடர்வோம்.)**

இப்படியே மற்ற இந்த்ரியங்களினால் அனுபவிக்கப்படுகிற விஷயானுபூதிகளை நிதானித்து அனுபவிக்க, அந்தந்த இந்த்ரிய உபாதிகள் உடைய வ்ருத்தி ஞானத்தின் பூரணத்வம் அனுபவத்துக்கு வரும்.

**(அடுத்து மனதின் பூரணத்வம் அனுபவத்துக்கு வரவேண்டியதன் நிருபணம் கூறுகிறார்.)**

ஒருவன் ஒரு காரியத்தில் இருக்க, அந்த காலத்திலே அனேக யோஜனைதூரமுள்ள ஒரு விஸ்தாரமான தேசம் அவன் மனதில் தோன்றுகிறது. அப்போது அவன் அருகில் இருக்கின்றவர்களால் கூறப்பட்ட வசனங்களை க்ரஹிக்கத்தெரியாமல் போகிறது. அவர்கள் அதை அறிந்து உன்னுடைய மனம் எங்கே சென்றிருக்கிறது என்று கேட்கிறார்கள். அதற்கு அவன் என் மனம் கீழ்ச்சொன்ன அனேக மாடகூடங்களால் அலங்கரிக்கப்பட்ட ஒரு பட்டணத்தில் போயிருந்தது என்று கூறுகிறான். அவ்வித அனுபவம் மனத்தில் உதித்தபடியே சோதித்தால் மனதின் பூரணத்வம் வெளிப்படும். முன் கூறின பட்டணத்தில் ப்ரவேசித்திராமல் இருக்கின்ற மனம் ஜடம். ஆனதால் அதனுள் இருந்துவிளங்கிய சிதாபாஸன் ஒருவன் இல்லாமல் போனால் முன்சொன்ன தேசம் விளங்க மாட்டாது.

**(ஆகையால் சிதாபாஸனை அறிய விவரம் கூறுகிறார்.)**

ஒருவருடைய மாடு வழிதப்பிப்போக அதை தேடிச் சென்றவனை மற்றொருவன் சந்திக்கிறான். உன்மாடு வெகு தூரத்தில் இருக்கிறது என்று துப்புச்சொல்லுகிறான். அதனால் அவன் அந்த இடத்தில் மாடு வந்ததை பார்த்திருக்க வேண்டியது அவச்யமல்லவா. அது போல இவன் மனம் அதிதூரமாயும் அதிவிஸ்தாரமாயும் உள்ள பட்டணத்தை சார்ந்திருப்பதாய் சொல்வதால்

இவனும் அவ்விடத்தில் இருந்து அவ்வித பூரணனாய் பவித்து அறிந்திருக்க வேண்டும். இவ்விதமாய் ஆலோசித்து திரும்பவும் அந்த அனுபவத்தை மனஸாலும் மன உபாதியை உடைய அறிவாலும் அறிந்து அனுபவித்தால் தான் அங்கே இருந்ததும் அங்கே வ்யாபித்திருந்தோம் என்ற மனஸினுடைய பூரணத்துவமும் தன் பூரணத்ததுவமும் தெரிய வரும்.

இப்படியேதான் மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்கிற நான்கு உபாதியை உடைய பூரணத்துவமும் வெளியாகும் என்பதை அறிந்து கொள்ளலாம்.

இப்படி ஸகல வியவகார அனுபூதிகளும் வ்ருத்தி ஞானமான தன்னை முன்னிட்டே அறியப்படுகிறது. அந்த வ்ருத்தியும் இல்லாத அவஸ்தையும் அனுபவத்திற்கு வருவதால் வ்ருத்தி இல்லாத இடத்தில் சிதாபாஸன் இல்லாதவன் ஆகிறான்.

**(சிதாபாஸன் என்பதன் பொருள் கூறுகிறார்)**

கண்ணாடியில் தோன்றின ப்ரதிபிம்பம் பிம்பமான முகத்தின் ஆபாஸம். நிருபாதிக ஞானமான கூடஸ்தன் அந்தக்கரண வ்ருத்தி யாம் கண்ணாடியில் ப்ரதிபிம்பிக்க அந்த ப்ரதிபிம்பமான ஞானம் சித் ஆன கூடஸ்தனது ஆபாஸமானதால் சிதாபாஸன் என்று கூறப்படுகிறான்.அவ்விதமான கூடஸ்தன்தானா, அல்லது சிதாபாஸ னான வ்ருத்தி ஞானம்தானா, நாமே எல்லாவற்றையும் அறிந்து விவகாரம் செய்வதால் ஸகல விவகாரிக சிதாபாஸனே நாமா, அவ்வியவகாரியான கூடஸ்தனை எப்படி அனுபவிக்கலாம் என்கிற வினாவுக்கு-

**(இனி விளக்கம் கூறுகிறார்).**

சிதாபாஸன் இல்லாத இடத்தையும் நாமே அனுபவித்து சொல்வதால் அந்த கூடஸ்த்தனது அனுபவத்தில் ஒப்பப்பட த்தக்கவனாகிறான். அந்த கூடஸ்த்தனே வ்ருத்தியின் உதவி இல்லா மல் ஸகலத்தையும் அறியும் தன்மை உடையவன். அவனையே நான் என்ற அனுபவத்தால் அறிய வேணும். இப்படி கூடஸ்தனான நம்மை தெளிய விவகார அனுபூதி ஏது என்று கூறுகிறார். ஜாக்ரத், ஸ்வப்னம், சுஷுப்தி என்கிற அவஸ்தைகளில் இரண்டை நீக்கி மூன்றாவதான சுஷுப்தியை பார்க்கில் அவ்வவஸ்தையில் வ்ருத்தி

இல்லாதனால் சிதாபாஸன் இல்லாதவன் ஆகிறான். சிதாபாஸன் இல்லாவிட்டால் அக்ஞானம் இருந்ததாக தோன்றுகிறது. இது எப்படி என்றால் தூங்கி விழித்தவுடன் நான் ஒன்றும் அறியாமல் சுகமாகத் தூங்கினேன் என்பதால் தோன்றுகிறது. இந்த அக்ஞானம் சிதா பாஸனையே சாரத்தகும். எப்படி எனில் சிதாபாஸனான தான் தூங்கிஇருந்தால் தன் சுகதூக்கத்தை எப்படி அறிவான்? ஆகையால் அறிகிறவன் தூங்க மாட்டான். அறியாமல் தூங்கினேன் என்று சொல்லக்கூடாது. நான் தூங்கினேன் என்ற விவகாரம் சிதா பாஸனிடத்தில் காணப்படுவதால் ஒன்றும் தெரியாமையான அக்ஞானமாம் சுஷுப்தி அனுபூதி சிதாபாஸனையே சாரத்தகும். ஆனால் அந்த சிதாபாஸனுக்கு அக்ஞானம் நேரிட்டதன் காரண மென்ன என்றால் கூறுகிறார்.

யாதொரு வ்ருத்தியும் இல்லாத இடம் சூன்யம் என்று கூறக்கூடாது. சூன்யம் என்று அறிய சாக்ஷி வேண்டும். சாக்ஷியும் சித்தாய் இருக்க வேண்டும்.
**(ஸ்ரீதேவ்யதர்வசீர்ஷோபநிஷத்தில்- ......சூன்யானாம் சூன்ய ஸாக்ஷிணி என தேவி வர்ணிக்கப்படுவது இங்கே தக்க ப்ரமாணம்.)**

சித்தின் ஸ்வபாவம் த்ருச்யத்தை எதிரிட்டுப்பார்க்கிறது. த்ருச்யம் நீங்கின இடம் பார்க்கிறோம் என்ற உபாதி அற்ற சுத்த அறிவு. அவ்வித நிர்குணமான, நிர்வ்ருத்தி கூடஸ்த சைதன்யம் நானென்கிற அஹங்கார வ்ருத்தியாம் கண்ணா டியில் ப்ரதிபிம்பிக்கிறது. நான் என்றதின் சுபாவம் கூடஸ்தன் என்று அறியாமல் அஹங்கார வ்ருத்தியையே நான் என்று அபிமானித்த தால் நேரிட்டது. இந்த அஹங்கார வ்ருத்தி ஜடமானது. அறியாத் தன்மை உடையது. அவ்வஹங்காரத்தின் அறியாமையால் அக்ஞானத்தால் அதில் ப்ரதிபிம்பமான தன்னிடத்தில் மேற்கூறின அக்ஞானம் தோன்ற தானும் தனது பிம்பமான கூடஸ்தனிடத்தில் நிற்கின்ற அஹங்காரத்தில் அக்ஞானம் என்று அறியாமல் கூடஸ்த னிடத்தில் அக்ஞானத்தை ஆரோபிக்கிறான். தன்னால் ஆரோபித்த அக்ஞானமாம் திரஸ்கரிணி யானது பிம்பமான கூடஸ்த னை தான் என்று அறிய வல்லமை இல்லாத தாக்கிவிடுகிறது.
**(இதற்கு உதாரணம் கூறுகிறார்)**

சில இடம் தெளிவாக இருக்கிறது. சில இடம் மலினமாய் இருக்கிறது. இப்படி ஒரு கண்ணாடி. இதில் முகம் ப்ரதிபிம்பிக்கிறது. இப்படி கண்ணாடியின் மலத்தால் தோன்றின குறைவை ப்ரதிபிம்பத்தில் கண்டு அந்த குறைவை பிம்பமான முகத்தில் ஆரோபிப்பதுபோல் ஆகும். உண்மையாக கூடஸ்தனிடத்தில் அறியும் தன்மை, அறியா தன்மை, சூன்யத்தன்மை, அஹங்காரம் இவ்வளவும் இல்லாததனால் கூடஸ்த ஞானமாத்திரமாய் இருந்தோம் என்று- விவேக சுத்த அஹங்கார கண்ணாடியில் தோன்றின ப்ரதிபிம்பமான சிதாபாஸனை உள்ளபடி தெளிகிறான். மலமில்லா கண்ணாடியில் ப்ரதிபிம்பித்த முகத்தை பார்த்து உள்ளபடி பிம்பமான முகம் நிர்மலம் என்று தெளிகிறான். அதாவது தான் தவிர மற்ற ஸர்வ த்ருச்ய ப்ரபஞ்சமும் ஜடமானதால் அவ்வித ஜடமான விவகாரங்களும் நிர்விகாரியான கூடஸ்தன்- பயம், மரணம், அதை தீர்க்கும் மந்த்ர சாமர்த்ய உபாயங்கள் இவைக ளெல்லாம் கயிறு என்ற ஞானம் இல்லாமல் ஆனதால் முக்காலத்திலும் கயிற்றை த்தவிர வேறில்லை என்று தெளிவது போல் நிர்விகார கூடஸ்த்த சைதன்ய மாத்ரமாய் தெளிந்து நிற்கிறான். சிதாபாஸனும் நிர் விகாரியாகி விட்டதால் விகாரம் நீங்கின இடம் கூடஸ்தனாகி விடுகிறது. சிதாபாஸ னும் அதன் உபாதியான சுத்த அஹங்காரமும் நிர்விகாரியாய் மாறிவிடும். அவ்வந்தக்கரணத்தின் சுபாவம் விகார மானதால் விகாரம் அற்ற இடம் நிர்விகார மானதாகி விடுகிறது. சுத்தமுடைய கற்பூர மலை அக்னிபட்டு எரிய அக்னியும் கர்பூரமும் எரிந்து ஆகாயமாத்ரமாய் விடுவது போல இரண்டும் முக்கால த்திலும் இல்லாதாக நசித்து கூடஸ்த மாத்ரமாய் மிஞ்சிவிடுகிறது.

இவ்வாறு ச்ருதி யுக்தி அனுபவங்களோடு கூட உண்மை யாய் அறிந்து **ஸமாதி** செய்ய வேண்டும். அதனால் ஸ்வானுபூதி பலத்தால் முக்தனாவான். மேன்மேலும் ஸ்வானுபூதி பலத்தால் முக்தன் என்ற வ்யவகாரமும் பந்தன் என்ற விவகாரத்தால் வந்ததால் முக்காலத்திலும் நம்மிடத்தில் பந்தம் வராமல் இருக்க முக்தியும், ஸமாதி பலத்தால் ஞானமும், நீங்கினது போல நீங்காமல் நீங்கி விடும். கூடஸ்தனது ஸ்வபாவம் அவஸ்தை மூன்றில் கண்ட ஸகல ஜகத்துக்கும் சாக்ஷி. அதுபோல ஸகுண ஈச்வர த்யானம் நிர்குண பரிபூரண த்யானம் அதற்கு சாக்ஷியாய் நின்ற பூரணத்திற்கும் பூரணமான பார்வை - அந்த பார்வையும் நீங்கிய வ்ருத்தி இல்லாத ஸ்வாத்ம அனுபவ ஸ்திதி - இவ்வளவும் கூடஸ்த்தனான தன்னால்

விளங்குவதால் ஜாக்ரத் முதல் அதீத ஸமாதி வரையிலும் தானே நிர்விகார கூடஸ்த்த ஞானத்தால் அறிந்தவனாகிறான்.

இவ்வித கூடஸ்த ஞானம் இல்லாமல் போனால் அவஸ்தாத்ரயம் சித்தியாது போல ஈச்வரனுக்கும் ச்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் சித்தியாது. கூடஸ்தன் நிர்குணன் ஆனதால் நிர்விசேஷன். நிர்விசேஷனிடத்தில் விசேஷம் ஒப்பக்கூடாது. ச்ருதி யுக்தி அனுபத்தினால் எங்கும் கூடஸ்தன் வ்யாபித்திருப்பதாய் தெரிகிறது. அதனால் வீடுகள் தோறும் வ்யாபித்த ஆகாயத்தை என்வீட்டு ஆகாயம் உன் வீட்டு ஆகாயம் என்று பேதமாக-பின்னமாக செய்ய முடியாதது போல கூடஸ்தனும் பேதிக்கப்பட மாட்டான்.

ச்ருஷ்டிக்கு முன்னும் பின்னும் ப்ரளயத்திற்கு பின்னும் அழியாமல் இருந்து இந்த மூன்றையும் அறிந்தவனே கூடஸ்த்த ப்ரம்மமாவான். அந்த வித தத்பத கூடஸ்தனுக்கும், அவஸ்தாத்ரய சாக்ஷிசைதன்யமாயும் கூடஸ்த ஸ்வபாவமாய் இருக்கின்ற நமக்கும் சாக்ஷி ரூபமாகவாவது ஞானரூபமாகவாவது பேதம் நிரூபிக்க முடியாததனால் - பேதமற்றது. ஏகமானது. ஏகமானதால் அவ்வித ஏகமான **நம்மைத்தவிர முக்காலத்திலும் அன்னியம் இல்லை** என்று தெளியாமல் தெளிய அந்தக் கணமே உண்மை வெளியாகும். இந்த உண்மையை அடைந்தவனை வேதங்கள் **ப்ரம்மம்** என்று **மங்கள பேரிகை** கொட்டி அடிக்கின்றன.

**இனி நமது அனுபவத்தின் இறுதியில் அருட்சக்தியின் சில வார்த்தைகள்:**

**லலிதானுபூதி :- லலிதா - ஓர் இன்ப கலப்பு**

ஒவ்வொரு இந்த்ரியங்களாலும் உலகில் விவகரிக்கும்போது, அலையும்போது மனதை ஒருமுகப்படுத்தி மனதிற்கும் இந்த்ரியங்களுக்கும் காணும் விஷயங்களுக்கும் இடைவெளியை மறைத்து பூரணத்தன்மையைக் கண்டு ஆனந்திக்க வேண்டும். அப்போது ஒரு அனுபூதியானது ஏற்படும். இந்த அனுபூதியால் சாதாரணமாக மனதினால் ஏற்படும் வினைத்தொடர்புகள் அறுபட்டு பார்வை, பார்க்கப்படும் பொருள், பார்ப்பவன் என்று த்ரிபுடி ஒழிந்து

அபேதபாவனை ஏற்படுகிறது. இதுவே **லலிதானுபூதி** என்று ஸ்ரீஸுந்தரஸ்வாமிகள் கூறுகின்றார்கள்.

மேலும் ஒன்பது விதமான வ்ருத்திகள் நிலைகள் அதாவது நினைவு, கனவு, ஆழ்உறக்கம், ஈச்வர விசாரம், குரூபஸதனம், உபதேச-ச்ரவணம், மனனம், நிதித்யாஸனம், ஸமாதி என்ற நிலைகளில் ஸமாதி நிலையில் ஏற்படும் பூரணத்திற்கும் பூரணமான பாவனையே **லலிதானுபூதி** என்றும் இந்தநிலையை விவரிக்கலாம். ***(இதன் விளக்கத்திற்காக ஸ்ரீநாகசுந்தரம் எழுதிய ஒரு கவிதை இங்கு இணைக்கப்படுகிறது-***

*நிறைவான ஞானம்தான் நிற்கும் லலிதை !*
***ல*** *என்ற முதலெழுத்து ஐம்புலத்தொடர்பு !*
***லி*** *என்ற இடையெழுத்து ஸாக்ஷிவ்ருத்தி !*
***தா*** *என்பதறிவு நிலை தத்துவம் இஃதே !*
***அனுபூதி*** *அடைந்திடும்* ***லலிதை*** *என்பார் !*
*அதற்கொரு விளக்கமே அறிவால் காண்போம் !*

*(ஸமாதியின்பம் பற்றி* ***காஞ்சி ஸ்ரீமஹா பெரியவர்கள்*** *அவர்கள் தன் அனுபூதியில் சொன்ன சில வாக்கியங்கள் இங்கு ஸ்ரீ ஸுந்தர ஸ்வாமிகளின் கருத்துடன் ஒத்துப்போகிறதாக தெரிந்ததால் அதனையும் இங்கு குறிப்பிட்டிருக்கிறேன்.)*

மனஸ் ஒன்றையும் நினைக்காமல் இருக்கவேண்டும். அதுதான் சிந்தையை அடக்கி சும்மா இருப்பது என்பது. ஆனால் இம்மாதிரி நினைவுடன் விடாமுயற்சியோடு இருக்கவேணும் என்று சிறிது நேரமாவது உட்கார தொடங்கினால் லலிதையின் அருளால் லக்ஷியம் கொஞ்சம் கொஞ்சமாக கைகூட ஆரம்பிக்கும். ஒன்றையும் நினைக்காமல் இருக்கவேண்டும் என்பதற்காக ஸாதனை செய்யும்போது ஒரு இடத்தில் (Stage) சிலசமயம் சிலருக்கு மனம் காலியாகப் போய் விடுவதுண்டு. அதாவது எண்ணம் எழும்பாத நிலை. இது வெறும் சூன்யம்தான். ஆத்மானுவம் இல்லை. மனதின் ஓட்டம் நின்றுவிட்டாலும் ஆத்மஜ்யோதியின் ப்ரகாசம் தெரியாதநிலை இது. இந்த அறிவு இன்னொன்றை ஆராய்ச்சி பண்ணித் தெரிந்து கொள்ளும் அறிவில்லை. **ஆத்மானுவம் என்பதோ பூர்ண ஞான நிலை.** ஆத்மாவோ, ஈச்வரனோ அந்த எதுவோ ஒன்று-

தெரியவேணும் என்ற தாபத்தை விடாமல் பிரார்த்தனை செய்து கொண்டு தொடர்ந்து இந்த ப்ரார்த்தனையில் நீடித்தால் இந்த சூன்ய நிலையிலிருந்தே ஆத்ம ஸம்பந்தமாக நினைப்பது மாத்ரம் நீடிக்கும். அதாவது ஒருநினைப்பும் இல்லாத நிலைமாறி ஆத்ம பரமான நினைவு மாத்ரம் இருக்கும். இது துன்பக்கலப்பே இல்லாத பேரின்பமான அனுபவம். இதன்பின் மூலமான மனதும் கரைந்து போய் நிறைந்த நிறைவான மௌனம் ஸித்திக்கும். இதையே **மௌனவாக்யா ப்ரகடிதம்** என்றது. முதலிலிருந்தே மேற்கண்ட சூன்ய நிலை- அதோடு முடிந்து விடக்கூடாது என்பதில் கவனமா யிருந்து விட்டால் எல்லாம் ஸரியாகிவிடும். பூர்ண ஞானநிலைக்குப் போய்விடலாம். முதலில் உண்டான சூன்யத்தை **லயம்** என்றும் முடிவில் உண்டாகும் பூர்ணத்தை **ஸமாதி** என்றும் ஆன்றோர்கள் சொல்வார்கள். இந்நிலையில் ஏற்படும் ஸமாதி இன்பமே ஒரு அனுபவமல்லவா! *(அதனால் இந்த ஸமாதி இன்ப அனுபவத்தை* ***லலிதானுபூதி*** *- அதாவது லலிதா என்ற சொல்லே ஓர் இன்ப கலப்பு எனலாம்.)*

உ

## 2. மஹாவாக்யங்களின் விரிவுரை

**(நிஜானந்தவிலாஸம்** என்ற நூலில் கண்ட **மஹாவாக்யார்த்த ப்ரகரணம்)**

ஸ்ரீவேதவ்யாஸர், ஸ்ரீசங்கரபகவத்பாதர் முதலான மஹான்கள் உபதேசிக்கும் வேதாந்த ரஹஸ்யத்தை பாஷா வசனத்தால் விவரிக்கிறோம். ஸகல மந்த்ர தபோ யாக யோகம் என்கிற அனேக அனுஷ்டான கலாஜாலங்களுக்கு ஏகமூலமான வேத வேதாந்த அர்த்தங்களை கிரமமான அப்பியாசத்தால் ஆத்ம ஞானத்தை யடைய சக்தியில்லா தவர்களுக்கு குருகடாக்ஷத்தால் இந்த **மஹாவாக்யார்த்த விவரணம்** என்ற ப்ரகரணத்தை நிரூபிப்போம்.

முதலில் குரு உபதேசப்ரகாரம் இந்த நான்கு மஹா வாக்கியங்களையும் ரிஷி, சந்தஸ், தேவதா, த்யான பூர்வமாக ஜபித்து, பின் இதன் அர்த்தத்தையும் அனுஸந்தானம் செய்வாயாக.

### ஸ்ரீமஹாவாக்ய ஜபவிதி

**அ.** பரமஹம்ஸ (மஹாவாக்ய) மஹாமந்த்ரஸ்ய ஹம்ஸ ரிஷி:
அவ்யக்த காயத்ரி சந்த: பரமஹம்ஸோ தேவதா.

**ஆ.** ஹம் பீஜம், ஸ: சக்தி: , ஸோஹம் கீலகம்.
நித்யப்ரஹ்மானந்தரூப அகண்டைகரஸானுபவ ஸித்யர்த்தே
ஜபே விநியோக:

**இ-ஈ**

ஓம் தத் ஸத்யம் ஞானமனந்தம் ப்ரஹ்ம- அங்குஷ்டாப்யாம் நம:/
ஹ்ருதயாய நம:

ஓம் த்வம் நித்யானந்தோ ப்ரஹ்மா- தர்ஜனீப்யாம் நம:/
சிரஸே ஸ்வாஹா

ஓம் அஸி நித்யானந்தமயோ ப்ரஹ்மா- மத்யமாப்யாம் நம:/
சிகாயை வஷட்

ஓம் அயம் யோ வை பூமா- அநாமிகாப்யாம் நம:/
கவசாய ஹும்

ஓம் ஆத்மா யோ வை பூமாபதி: - கனிஷ்டிகாப்யாம் நம:/
நேத்ரத்ரயாய வௌஷட்

ஓம் ப்ரஹ்மா ஏவகைவாத்விதீயம் ப்ரஹ்மா-
கரதலகரப்ருஷ்டாப்யாம் நம: / அஸ்த்ராய பட்

**உ.** ஓம் அகண்டைகரஸ ப்ரஹ்மைவாஹம் இதி திக்பந்த:

**ஊ.** த்யானம்:

நித்யானந்தம் பரமஸுகதம் கேவலம் ஞானமூர்த்திம்
தத்வாதீதம் ககனஸத்ருசம் தத்வமஸ்யாதி லக்ஷ்யம்
ஏகம் நித்யம் விமலமமலம் ஸர்வதீ ஸாக்ஷிபூதம்
பாவாதீதம் த்ரிகுணரஹிதம் ஸத்குரும் தம் நமாமி

**எ.** பஞ்சபூஜை

**ஏ.** மந்த்ரம்:

**(ஓம்) சிவாத்யவனி பர்யாந்த பரிஹித்ய**
**ஸகல ப்ரபஞ்சாதிஷ்டான ப்ரஹ்மைவாஹம்**
*(16 ஆவர்த்தி ஜபம்)*

**(ஓம்) ப்ரக்ஞானம் ப்ரஹ்மா, அஹம் ப்ரஹ்மாஸ்மி,**
**தத்-த்வம்-அஸி, அயமாத்மா ப்ரஹ்மா**
*(108 ஆவர்த்தி ஜபம்)*

**ஐ.** உத்தராங்கம்.

1. ப்ரக்ஞானம் ப்ரஹ்மா:

**என்னுடைய ப்ரக்ஞானம் ப்ரஹ்மம்தான்** என ப்ரக்ஞையால் விளங்கிய தேஹாதி ப்ரபஞ்சமும் நானும் ப்ரஹ்மம் என்றறிவாய். ப்ரக்ஞானத்தைத் தவிர (த்ருசிய) பார்க்கப்படுகிற ப்ரபஞ்சம் வேறாக இல்லாததாலும், என்னைத்தவிர ப்ரக்ஞானம் வேறுபடாததாலும், நான் ப்ரஹ்மத்தைத் தவிர வேறில்லாமையாலும் **ப்ரஹ்மமே** யாகலாம். இது எப்படியெனில்-

புத்திவ்ருத்தி விளங்கிய ஜாக்ரத்- ஸ்வப்னங்களில் (பார்க்கப்படுகிறது) த்ருச்யம் தோன்றுவதாலும், அவ்வ்ருத்தி உதய மில்லாத சுஷுப்தி மூர்ச்சைகளில் த்ருச்யம் (பார்க்கப்படுகிறது) இல்லாமையாலும் **ப்ரக்ஞானமே ஜகத்**தாகும். பலருக்கு சுஷுப்தியில் பார்வை இருக்கிறதே என்ற வினாவுக்கு ஸமாதானம் கூறப்படுகிறது. கல்வழி நடப்பவன் காலிட்ட செருப்பால் தோலிட்ட வழியாய் பார்ப்பது போல **(கற்கள் பரப்பிய தரையில் நடப்பவன் தன் காலில் தோலால் ஆன செருப்பு அணிந்திருந்தாலும் அந்த கற்களின் மேடு பள்ளங்களை உணர்ந்தாலும் அந்த கற்களின் உண்மைத் தன்மையை உணராது தோலை மட்டும் உணர்வதுபோல)** முமுக்ஷுவுக்கு இது மறந்துபோகும். தீரவிஜாரிக்கும்போது சிப்பி வெள்ளியாக தோன்றியதுபோல கல்பிதமே இந்த ஜகத்து. பின்பு இந்த புத்தி வ்ருத்தி ப்ரக்ஞானம்- தேஹாதி ப்ரபஞ்சமாக பரிணமிக்கிற வகையைக் கூறுகிறார். ஒரு பூரண தடாகத்தில் ஜலமடை வழிவந்து பெருங்கால் சிறுகால்களில் பிரிந்து, முக்கோண வட்டசதுரங்களான வயல்களில் பாய்ந்து அந்தந்த ரூபமாக தோன்றுவது போல- இந்த ப்ரக்ஞான ஆன்மா அந்தக்கரணவழியால் சக்ஷுஸ் முதலான இந்த்ரிய வழியாக வெளி வந்து, கடபடாதிகளில் பாய்ந்து அந்தந்த விஷயமாகத் தோன்று வதால் **ப்ரக்ஞானமே ஜகத்**தாகும்.

இந்த ப்ரக்ஞானம்- **ஸவிகாரம், நிர்விகாரம், ஸ்வாத்மரூபம்** என மூன்று ரூபமாகும். ஸவிகாரமாயிருக்க விஷயந்தோன்றும். நிர்விகாரமாயிருக்க விஷயம் மறந்து போகும். ஸ்வாத்மரூபமா யிருக்க ஜகத் பான,அபானங்களிரண்டையும் விட்டு, கேவல ஸம்வித் கனமாகவே இருக்கும். ஆனதால் அதுவே ப்ரஹ்மம் என்று சொல்லப்படும். ப்ரக்ஞானமே ப்ரஹ்மமென்றிருந்தால் தானான ப்ரக்ஞையால் தனது வடிவமான ப்ரஹ்மத்தையறிய இதர ஸாதனம்

வேண்டியதில்லையே!- மற்றும் உலகத்தில் ப்ராஹ்மணன் தன்னை ப்ராஹ்மணனாக அறியவேண்டி குருகுலவாசம் முதலியன செய்யவில்லையே! - என்றதற்கு ஸமாதானம் கூறுகிறார். ப்ராஹ்மணன் மூன்று-நான்கு வயதுக்குப்பின தன் ஸகவாசத்தால் நான் ப்ராஹ்மணன் என்று தெரிகிறான். தனது ஜனன காலத்தில் தானிருந்தும் தன் ஜன்ம லக்னத்தை அறியாமல் பின்பு மற்றவரால் தெரிந்து கொள்வது போல்தான். ப்ரக்ஞானமாத்மாவும் குரு க்ருபையால் (**ஸ்வரூப நிருபண ஹேது** - *ஸ்ரீகுருபாதுகா மந்த்ரம்*) ஸ்வரூபமாகிய ப்ரஹ்மத்தை அறிகிறான். ஆனதால் **ப்ரக்ஞானம் ப்ரஹ்மம்** என்பது சரி.

மேற்சொன்ன உதாரணம் போல இந்த ப்ரக்ஞானவான்மாவுக்கு வந்திருக்கும் ஸ்திதியை இனி சொல்லுகிறார். எண்ணிமுடியா கல்பங்களில் தான் இன்னான் என்று அறியாமல் சேதனமான க்ஷேத்ராதி ஹானிவ்ருத்தியிலும், சேதன பசு, புத்ராதி ஹானி வ்ருத்தியிலும், பாத பாணியாதி கன்மேந்த்ரிய ஹானி வ்ருத்தியிலும் - அததுகளில் ஆன்மா அத்தியாசம் செய்து- நான் கெட்டேன், நான் வாழ்ந்தேன் என்று புலம்புவான். பின்பு கர்மாதிகாரியாகி விதிநிஷேதத்தை விசாரிக்குமளவில் தேஹத்தைக் காட்டிலும் தான் வேறு என்றறிவான். பின்பு வேதாந்த அப்யாச சமயத்தில் ஜீவன் விக்ஞானவான்மா சிதாபாஸனென்று பரோக்ஷமாக அறிவான். இவ்வாறு யானையைக் கண்ட குருடர் போல அறிந்ததன்றி பர மார்த்தத்தை அறியமாட்டான். அதிகாரி பக்குவ அநுகுணமாக **குருப்ரஸாதம்** வரும்போது **ப்ரக்ஞானமென்ற ஜீவனே ப்ரஹ்மத்வம்** என்பதை தசமன் கதைபோல ஸாக்ஷாத்கரிப்பான். ருக்வேத மஹாவாக்யார்த்த நிரந்தர அப்பியாச நிமித்தம் இந்த ப்ரகரணம் உபதேசிக்கப்படுகிறது.

**2. அஹம் ப்ரஹ்மாஸ்மி**: -

**நான் ப்ரஹ்மமாயிருக்கிறேன்** என்பது இதன் பொருள். இதில் அஹம் பதத்திற்கு கூடஸ்தன் என்றும், ப்ரஹ்ம பதத்திற்கு ஸர்வ காரண அகண்ட ஸ்வரூபம் என்றும், அஸ்மி பதத்திற்கு முன்கூறின இருபதங்களின் ஒருமிப்பைச் செய்வது என்றும் அர்த்தமாகும். இந்த மூன்று பத அர்த்தத்திலும் **த்வைதவிருத்தி, சாக்ஷிவ்ருத்தி, அகண்டாகாரவ்ருத்தி** என்ற மூன்று வ்ருத்திகள். சாளக்ராமத்தில்

விஷ்ணு சிலா புத்திபோல, தேஹாதியிலும் ஆன்மாவிலும் அஹம் வ்ருத்தி ஸமமாயிருப்பதே **த்வைத வ்ருத்தி** என்பதாம். இதனை **யோக பரிச்சின்ன ஸ்வரூபானுபவ வ்ருத்தி** என்றும் கூறுவர். அஹம் பதத்துக்கு அர்த்தமான ஜீவனைவிட்டு கூடஸ்த ப்ரஹ்மமாகவே இருக்கிறோம் என்றும், தேஹாதி ப்ரபஞ்சமில்லை என்றும் ஸந்ததம் துணிந்த அனுஸந்தான வ்ருத்தியே ப்ரஹ்ம பத அர்த்தமான **சாக்ஷி வ்ருத்தி**யாகும். அஸ்மி பத அர்த்தமான ஜீவன்முக்தி ஸ்வரூபம் தமோ ரஜோ குணங்கள் நசித்து, சுத்த சத்துவகுணம் சேஷித்து, அகண்டான்மா அனுபவம் செய்வது அஸ்மி பதார்த்தமான **அகண்டாகாரவ்ருத்தி** என்பதாம். மனம் ராஜஸ தாமஸங்களை சேர்ந்த வேளையில் விஷய துக்கங்களை உண்டாக்கும். தனது ஸ்வபாவம் ஸத்துவத்திலிருந்தால் விஷயம் நீங்கி, தானும் தனது ஸ்வரூபமான ப்ரஹ்மத்தில் ஒன்றாகும். அது எப்படியென்றால் இரு தெளிந்த கண்ணாடிகளை எதிரிட்டால் அது பேதமில்லாமல் ஒன்றாயிருக்கும். அதுபோல ஸத்துவ மனமும் ப்ரஹ்மமும் ஒன்றாய் நிர்விகல்ப மாயிருக்கும். அதனை ஜீவன்முக்தி ஸ்வரூபமான **அகண்டாகாரவ்ருத்தி** என்பர். இந்த மூன்று பதத்தின் வியஷ்டி அர்த்தங்களைக் காட்டிலும் மேலான ஸமஷ்டி அர்த்தத்தை **அகண்ட ஏகரஸமெ** ன்றும், விதேஹ முக்தி என்றும் சொல்லுவர். இந்த அகண்டைகரஸமாவது அஹம்ப்ரஹ்மாஸ்மி என்ற மூன்று பதார்த்தங்களையும் மறந்து, செண்டு பிடித்த சுழுத்தன் போல **(ஆழ்உறக்கத்தில்- கையில் பிடித்திருந்த பூச்செண்டு நழுவி-கழன்று விழுவதுபோல்)** அனந்த மாத்திரமாயிருப்பதே **அகண்டைகரஸம்.** இதனை **விதேஹ கைவல்யம், அருபநாசம், லிங்கதேஹாவசானம்** என்றும் கூறுவர்.

**3. தத்வமஸி** -

இதன் ஸமஷ்டியார்த்தம் - **அது நீ யாகிறாய்** என்பதாம். **தத்-த்வம்-அஸி.** இந்த மூன்று பதத்திற்கு வாச்சியார்த்தம்-3, லக்ஷியார்த்தம்-3 இருக்கின்றது.

**தத்- பதத்திற்கு வாச்சியார்த்தம்-** ஸர்வக்ஞ த்வாதி குணவிசிஷ்ட ஈச்வரானாம்.

**தத்- பதத்திற்கு லக்ஷியார்த்தம்-** மஹாகாசம் போல பரிபூரண அகண்ட ப்ரஹ்மம்.

**த்வம் பதத்திற்கு வாச்சியார்த்தம்-** கிஞ்சிஞ்த்துவாதி குணவிசிஷ்ட ஜீவனாம்.

**த்வம் பதத்திற்கு லக்ஷியார்த்தம்**- கடாகாசம் மடாகாசம் போல புத்திக்குஹையில் வளைபட்டவர் போலிருக்கும் கூடஸ்த ப்ரஹ்மம். இங்கு ஒரு வினா வருகிறது. அதாவது ஒரு வஸ்துவில் உபய விதார்த்தம் எப்படிக்கூடும்? இதற்கு ஸமாதானம்- வாச்சியார்த்தத்தில்- விட்டுவிடாத லக்ஷிணை என்ற **ஸோஅயம் தேவதத்த:** என்கிற பதார்த்தம் போல கூடும். எவ்வாறெனில்- **ஸ: அயம்** என்ற அன்னியோன்னிய வ்ருத்த பதார்த்தங்களை விவகார மாத்திரத்தில் அடைந்து தானான **தேவதத்த** பாவத்தை விடாமலிருப்பான். ஒருவன் வ்யக்திபேதா அபேக்ஷயால் பித்ரு, புத்திர, ப்ராத்ரு, ஜாமாதா, மாதுலாதி சப்தார்த்தங்களை அடைவது போலும்-, தேசபேதத்தால் கேரள, சோழ நாமார்த்தங்களை அடைவது போலும்-, கால அபேக்ஷயால் பால, தருண நாமார்த்தங்களை அடைவது போலும் ப்ருக்ருதத்திலும் உபயவிதார்த்தம் வருகிறது. லக்ஷியார்த்தத்தில்- **தத்பத** வாச்சியார்த்த ஹேது அந்தத் தேசகால வ்ருத்திச் சின்னங்களையும், **த்வம்** சப்த வாச்சியார்த்தத்தில் ஹேதுவாகிய இந்ததேசகால வ்ருத்தி சின்னங்களையும் தள்ளி விடவும். தேவதத்த சரீர மாத்திரத்திலே ஏகார்த்தம் கூடுவது போல வாச்சியார்த்தமாகிற **தத்** சப்தம் மஹேச்வரருடைய ஸர்வக்ஞத்வாதி குணங்களையும் **த்வம்** சப்த வாச்சியார்த்த ஜீவனுடைய கிஞ்சிஞித்துவாதி ஹீன குணங்களையும் தள்ளிவிடவும். பின்பு அதிஷ்டான **அகண்ட ப்ரஹ்மம்** மாத்திரமாய்ப் பார்க்க- கல்பித ஜீவேச்வர நாமாரூபாதிகள் சிப்பி வெள்ளி போல ஒளிருமளவில் ஒரு ஆசாசமே கடாகாசம், மடாகாசம், மஹாகாசம் என்று தோன்றுவது போல **கூடஸ்தப்ரஹ்மம்- பரப்ரஹ்மம்** என விவகார மாத்திரத்தில் இடமாகும். ஆனால் பரமார்த்தத்தில் ஒன்றுதான். (**ஸ்வச்ச ப்ரகாச விமர்ச ஹேது** - *ஸ்ரீபரமகுருபாதுகா மந்த்ரம்*)

**அஸி பதத்திற்கு வாச்சியார்த்தம்**- அது நீயாகிறாய் என்று ஸாமான்யமாகச் சொல்லுவது. தத்-த்வம் பதார்த்தசோதனமில்லாமல் மெதப்பு பார்வையால் ஆகிறாய் என்று வர்த்தமானார்த்தம் வருகிறது.

**அஸி பதத்திற்கு லக்ஷியார்த்தம்**- கடாகாசம் போல நிர்விகார கூடஸ்தனாகிய நீயே- **நித்ய, சுத்த, முக்த அகண்டானந்த ஸ்வரூபமாகவே** இருக்கிறாய் என்று பூதார்த்தமாக சொல்லுகிறது. **அஸி** என்பதற்கு அனுபதனீதன் (அர்த்தமாகுபவன்) இவன். சிலகாலத்தில் வித்வான் என்பதுபோல அந்த வஸ்துவாக நீ பவிப்பாய் என்ற பாவியார்த்தமாவது-, அப்யாஸியாகிய நீ

மஹாவித்வானாகிறாய் என்று காலாந்தர அர்த்தத்தை அறிந்து சொல்வது போலவாவது-, வர்த்தமான அர்த்தமாகட்டுமே! என்றால் அதற்கு ஸமாதானம். முன்சொன்னவாறு இந்த கட்டத்தில் அஸி பதத்திற்கு வர்த்தமான, பாவியார்த்தங்களில்லை. லக்ஷியார்த்தமான பூதார்த்தமே பரமார்த்தம். ஏதென்றால் ஒரு வஸ்து மற்றொரு வஸ்துவாகிறதில்லை யன்றோ! ஆனால் இங்கு மேலும் ஒரு ஸந்தேஹம் வருகிறது. த்வம் வாச்சியார்த்த ஜீவனாகிய தான் தாம்ரம் மற்றும் சில உலோகங்கள் ஸித்த ஓஷதி ரஸ ஸம்ஸர்க்கத்தினால் ஸ்வர்ணமாவது போல தபஸ், வித்யா, ஸமாதியினால் தத் சப்த லக்ஷியார்த்தமாகிய ப்ரஹ்மமாக பவிப்பாய் என்று பாவியார்த்தமாவது- வர்த்தமானார்த்தமாவது வந்தால் அந்த ப்ரஹ்ம நிஷ்டனுக்கு என்ன தோஷம்? **(இதற்கு ஸமாதானம் கூறுகிறார்.)** தாம்ரம் மற்றும் சில உலோகங்கள் ஸித்த, ஓஷதி, ரஸவீர்யம் நசிக்கும் போது ஸ்வர்ணம் போலிருந்த வர்ணமும் நசித்துப்போகும். ஸம்ஸர்க்க ரூபத்தை கொஞ்சகாலம் காட்டி பின்பு மலின வர்ணாதி ஹீன குணங்களை அடைவதுபோல இந்த ஜீவனும் ஸாதனத்தால் அடைந்த ப்ரஹ்ம த்துவத்தையும் காலக்கிரமத்தில் விட்டு முன்போல துக்கம் முதலான ஹீனகுணங்களை அடைவான். இது சுருதி, யுக்தி அனுபவ விரோத மூலமானது. ஆகையால் **அஸி** பதத்திற்கு முன்னமேயே **நீ ப்ரஹ்மமாகத்தான் இருக்கிறாய்** என்பதே **லக்ஷியார்த்த ஸாத்யம். (ஸ்வாத்மாராம பஞ்ஜரவிலீன தேஜஸ்** - *ஶ்ரீபரமேஷ்டிகுருபாதுகா மந்த்ரம்)*

ஜீவன் ப்ரஹ்மமாகவே இருந்தும் ஏதோ ஒரு காரணத்தால் தன்னை மறந்து பின்பு குரு உபதேச சிரவணாதிகளால் சைலூஷராஜன் போல தன்னையறிந்து தானாகலாம். ஆனால் உபாஸனா காண்டத்திலுள்ள யோகாப்யாசாதிகள் வேண்டி யதில்லை. ஏனெனில் அதிகாரி பேதங்கள் என சொல்லுவோம். அத்யந்த முக்கிய அதிகாரிகளான **வாமதேவாதிகள்** ஜனிக்கும் போதே இவையெல்லாம் ப்ரஹ்மமாகிய நாமே என்று வெளி வந்தார்கள். முக்கிய அதிகாரிகளான **சுகேசர்** முதலானவர்கள் பிப்பலாத குருவுபதேசத்தால் ப்ரஹ்ம நிஷ்டரானார்கள். கௌணா திகாரிகளான தேவேந்திராதிகள் 3, 4, பர்யாய உபதேசத்தால் நிஷ்டையடைந்தார்கள். மந்தாதிகாரிகளான ஜீவர்கள் தத்-த்வம் பதார்த்த சோதனத்தை குருமுகாது ப்ரஸ்தானத்ரய சாந்தி செய்து, அதில் நூற்றிலொருவன் நிஷ்டை பெறுவான். மந்தர்களுக்கு

வேதாந்தார்த்தம் காதில் கேளாமலும், கேட்டாலும்கூட போதம் கூடாமலிருக்கிறது. இதிலும் கீழான விபரீத பாவனைக்காரர்கள் வேதாந்த விசாரஸ்தலத்தில் உபேக்ஷை, விரக்தி, விரோதங்களை அடைவார்கள். ஆகவே மேல்-கீழ் உள்ள அதிகாரிகளைத் தள்ளி பாகுள்ளியமான நடுக்கண்ட முக்கிய அதிகாரியைக் குறித்து இந்த மஹாவாக்யோபதேசம் வரும். அத்யந்த முக்கியஅதிகாரிகளுக்கோ வென்றால்- அவித்யா வாஸனை நீங்கல், பற்றல் இல்லாமையால் உபாஸனா காண்டத்திலும் உபயோகமில்லை. மற்ற முக்கிய கௌணாதிகாரிகள் இருவருமே தாருகோபாஸனத்துடன் ப்ரஹ்ம நிஷ்டராகவேண்டியது. இவ்வாறிருக்கும்போது மந்தர்களாகிய நம்போலிகளுக்கு **(நம்போன்றவர்களுக்கு)** உபாஸனையில் சந்தேகிக்க தேவையில்லை.

பின்னும் எவனுக்கு உபாஸனை யில்லாமல் நிஷ்டை கிடையாதோ அவன் ஜன்மாந்த்ர உபாஸகன் என்றும் ப்ரமாணமுண்டு. நம்மை பரிநிஷ்டித ப்ரஹ்மமாக உபதேசிப்பதால் ப்ரஹ்மமாகிய நமக்கு விதிநிஷேதங்கள் இல்லையென்று யதேச்சாரமும் கூடாது. ***(மோக்ஷ பர்யந்தந்தம் ஸந்ததம் அனுசரித்தான் - என்று ப்ரம்ம ஞானமடைந்த சீடன் கூட தன் குருவுக்கு பணிவிடை செய்தான் என்று கைவல்ய நவநீதம் கூறும்)*** . புண்ணிய-பாபாதிகள் பரமார்த்த திசையில் பொய்யானாலும், அந்த நிஷ்டா ப்ராப்திவரை ஸத்தியமாக பலம் ஸித்தியாகும். ஸ்வப்ன புலி தர்சனம் பய கம்பாதியுடன் ஜாக்ரத் காலம் வரை ஸத்தியமாக துக்கத்தைக் கொடுப்பது போல்தான். ஆகவே தீர்த்தமாடல் முதல் தத்துவபாவனை வரை க்ரமாக முக்கிய அதிகாரிகள் பர்யந்தம் நான்கு பேருக்கும் யதாயோக்யம் அவசியம் அனுஷ்டிக்கதக்கது. இந்த **தத்** ஆதி பதத்ரயங்களுக்கு லக்ஷியார்த்தமே பரமார்த்தம். வாச்சியார்த்தம் எதெற்காகவென்றால் பரமார்த்தத்தை போதிக்கும் பொருட்டு- இந்த திருடன் வெட்டுக்குத்திதான் என்பதுபோல போதித்தது. ஆகவே மஹாவாக்கிய விதிநிஷேத அவாந்திராதி வாக்யங்களுக்கு எல்லாம் அத்வைத ப்ரஹ்மத்தில் ஸமாப்தி என்றறிந்து, **கேவல ஸ்வரூபமாக இருப்பாய்** என்று **ஸாமவேத மஹாவாக்யம்** உபதேசிக்கும். இதுவே தத்துவோபதேசம். இதுவே ஜன்ம ஸாபல்யம். இந்த உபதேஷ்டாவே **தக்ஷிணாமூர்த்தி** என்றறிவாய்.

## 4. அயமாத்மா ப்ரஹ்மம்

அயம் பதத்திற்கு ஜீவன் என்று பொருள். ஆத்ம பதத்திற்கு ஸமஷ்டி அபிமானியாகிய ஈச்வரன் என்று பொருள். ப்ரஹ்ம பதத்திற்கு- இந்த இரண்டிலுள்ள வாச்சியார்த்த ஹேதுவான உபாதிகளைத்தள்ளி லக்ஷியார்த்த லக்ஷணமான நிருபாதிக ஸ்வரூபத்தை மாத்திரம் ஸஜாதீய, விஜாதீய, சுகதபேத சூன்யமாக அறிந்து, அகண்டைக ரஸமாக இருப்பது என்பதே பொருளாகும்.

இந்த புருஷன் அகண்டைகரஸமாகவே இல்லாத காரணம் என்ன என்று கூறுவோம். அநாதி அவித்யா வாஸனையால் **அன்னமய கோசமென்ற தேஹ**த்திலும், **ப்ராணமயகோசமென்ற** முக்கிய **ப்ராணவாயு**விலும், **மனோமயகோசமென்ற ஸங்கல்ப ரூப**த்திலும், **விக்ஞானமயகோசமென்ற புத்தி**யிலும், **ஆனந்த மயகோசமென்ற சுஷுப்தி**யிலும் நான் என்றும்- எனது என்றும் அபிமானத்தால் அழுந்திவிடுகிறான். நாடகத்தில் அரிச்சந்த்ர வேடமணிந்தவன்- புத்திர மரண, சவத்தைக்காத்தல் ஆகிய சோகங்களை அனுபவிப்பதுபோல் ஸ்வபாவத்தை மறந்து, அகண்டைகரஸமாகவே இருக்கவில்லை. வெகு ஜன்ம புண்ணி யராசிகள் பரிபக்குவம் ஆகும்போது குரு ஸந்நிதியில் ச்ரவணாதி ஸாதனங்களை அடைகிறான். பஞ்சகோசங்களை விலக்கி திரிவித பேத சூன்யமாய் ப்ரஹ்ம ஸ்வரூபமாகவே இருப்பான்.

ப்ரஹ்ம சப்தத்திற்கு பொருளாவது: வஸ்து அந்தரமில்லாத பூரண ஸ்வரூபம் ப்ரகாசிக்கும். இப்படியிருக்க முந்திய பேதங்கள் எப்படிக்கூடும்? என்றால் கூறுவோம். **ஸஜாதீய பேதமாவது-** ஒரு மரத்துக்கு மற்றொரு மரம். இப்படி ஸமான ஜாதியான மற்றொரு ப்ரஹ்மம் ப்ரஹ்மத்திற்கில்லை. **விஜாதீயமாவது-** மரத்துக்கன்னிய மாகிய ஜலம், கல், மண் போன்ற விஜாதீயத்ரவ்யங்கள். ப்ரஹ்மம் ஒன்றைத்தவிர வேறு விஜாதீயவஸ்துக்கள் இல்லை. தைத்ரீயம் முதலான சுருதிகளில் பூத-பௌதீக ச்ருஷ்டியை ப்ரத்யக்ஷமாகச் சொல்லியிருக்க மித்தையான ஸ்வரூபம் எப்படிக்கூடும்? அனுபவ விரோதமாக இருக்கிறதே! என்றால், கூறுவோம். ஸாமான்யம்- விசேஷம் என்று இரண்டுவிதம். தைத்ரீயம் முதலான சுருதிகள் உலகம் ஒப்புக்கொண்டவாறு வ்யவகாரிக ஸத்யத்துவத்தை அவலம்பித்து, விவகரித்து, இடைக்கிடை பயமுண்டாகிற சொற்க

ளால் ச்ருஷ்டியில் உண்டாகி யிருக்கிறதை அழித்து ப்ரஹ்மமொன்றையே ஸித்தாந்தம் செய்திருக்கிறது. மாண்டுக்யம் முதலான வெகுசுருதிகள் ஆமூலாக்கிரமமாக இகப்ரபஞ்ச வைதத்தியத்தை ஸ்தாபித்து இருக்கிறது. அது ப்ரமாண பரிவினாசக நியாயேன விசேஷோக்தி ப்ரசங்கமானது. மஹா பூத பௌதிகங்கள் கயிறு-பாம்பு போல மித்தையான ஸ்வரூபம். அதனால் விஜாதீய பேதமில்லை. **சுகதமேதமாவது-** மரத்துக்கு தனது அம்ச பேதமாகிய தோல்(பட்டை) கழிந்த இலை, புஷ்பம், பழம் போன்ற பேதங்கள் உண்டு. ப்ரஹ்மத்துக்கு தன் அம்சமான வஸ்துக்கள் ஒன்றுமில்லை.

மூலப்ரக்ருதி, மாயா, அவித்தை, ஈச்வராதி பேதங்களுள்ளதே என்றால் முக்தாளுக்கு இவையில்லை. முமுக்ஷுவுக்கு சிலகாலத்தில் சிலவுண்டு. சிலகாலத்தில் ஒன்றுமில்லை. வந்திருந்த அத்தியாரோபத்தை (இல்லாதாக்கும்) அபவாதிக்கும் பொருட்டு உளர் மொத்தக் கணக்கிலுத்தரவு சேர்த்து மானியம் செலவு செய்வதுபோல் ஆத்மானந்த போதத்தை அடைந்தவர்களுக்கு ப்ராபஞ்சிக ச்ருஷ்டியாதி மித்யா ஸ்வரூபமென்றும், அநாதிவித்யா ஆச்ரய சுழுபத்தாளாகிய அக்ஞ ஜனங்களுக்கு ஸத்தியமென்றும், சுருதி யுக்தி அனுபவங்களில் ஸ்பஷ்டாக இருப்பதால் சுகத பேதமில்லை.

ஆகவே **அயமாத்மா ப்ரஹ்மம்** என்ற தர்சன மஹாவாக்யம் அகண்டைகரஸத்தைச் சொல்லுகிறது என்றும், குருநாதர் உபதேசித்தபடி நீயும் **நித்திய ப்ரஹ்மானந்த ஸுதாம்புதி** யாகும் பொருட்டு மஹாவாக்கிய ப்ரகரணத்தை விவரணம் செய்தோம். இந்த **மஹாவாக்யார்த்த விவரணம்** என்கிற ப்ரகரணத்தை நித்யானுஸந்தானம் அப்யாஸம் செய்பவர் ஸகல ஸந்தேக முடிச்சுகளையும் பேதித்து அகண்டானந்த ஸ்வரூபமாவார்.

சுபம்

